13th September 1958]

SRI S. M. ANNAMALAI : இந்த ரசாயன உரமானது கள்ள மார்க்கெட்டில் விற்கப்படுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? சென்ற பட்ஜெட் கூட்டத்திலேயே வடாற்காடு ஜில்லாவில் ரசாயன உரம் கள்ள மார்க்கெட்டில் விற்கப்படுவதாகப் புகார் செய்யப்பட்டிருக்கிறதே. அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புகார் சொல்லப்பட்டு வருகிறது. அதைத் தவிர்ப்பதற்காகத்தான் கலெக்டர்கள் கண்காணிப்பாக இருக்கவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டிருக்கிறது. குறிப்பாக இங்கே புகார் சொல்லப்பட்டால் அதன் பேரிலும் நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்குத் தயாராக இருக்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கலப்பு நிலங்களில் அமோனியம் சல்பேட் போடுவதால் நல்லமுறையில் விவசாயம் ஆவதில்லை. ஆகவே சிந்திரி உரம் சப்ளை செய்யவேண்டுமென்று கேட்கிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? கலப்பு நிலத்தில் சிந்திரி உரம் போட்டு விவசாயத்தைப் பெருக்குவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அமோனியம் சல்பேட், நைட்ரேட், யூரியா முதலியன எல்லாமே ரசாயன உரங்கள் தாம். சிந்திரி உரம் என்ற பெயர் இல்லை. எல்லாம் ஒரே முறையில் செய்யப்படுகிறது. தமிழ் நாட்டிலுள்ளவர்கள் சிந்திரி உரத்தைத்தான் விரும்புகிறார்கள். போதுமான அளவு இங்கே அது உற்பத்தி செய்யப்படாமையினால் இறக்குமதி செய்யப்படுவன விநியோகிக்கப்படுகிறது.

SRI M. WILLIAM : In order to avoid blackmarketing in the sale of fertilisers, will the Government be pleased to issue instructions for selling the same through the Block Development Offices in areas where the N.E.S. blocks have already been formed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : In the Block Development areas, the distribution of chemical fertilisers is exclusively done by co-operative organisations and so far as co-operative organisations are concerned, I have not received this kind of complaint about blackmarketing.

MR. SPEAKER : நிதி அமைச்சர் சென்னையில் இல்லாததால் கேள்விகள் 205, 212, 218, 224 அவர் வந்த பிறகு எடுத்துக்கொள்ளப்படும்.

## *Nurses*

* 206 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the total number of registered nurses;

(*b*) the number of nurses still unemployed; and

(*c*) the steps taken to find employment for them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The total number of Registered Nurses as per the Register of Nurses maintained by the Madras Nurses and Midwives Council is 6,580 as on 27th May 1958. This number includes also the nurses trained is private medical institutions in this State as well as in some neighbouring States.

[13th September 1958

(b) At present no nurse trained in Government Medical Institutions of this State at Government cost is unemployed for want of vacancies.

(c) The question does not arise in respect of nurses trained by Government at their cost. As regards oher nurse, the Government do not undertake to find employment for them.

SRI A. A. RASHEED: Will the Government restrict the appointment of male nurses to the profession in order to give more employment to the women nurses?

THE HON. SRI M. A. MANICKAVELU: The question of male and female nurses does not arise from this question. But, I may inform the hon. Member that we are considering as far as possible to reduce the number of male nurses.

*Ginning and baniyan factories*

*207 Q.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to extend the provisions of the Minimum Wages Act, 1948, to ginning and baniyan factories?

THE HON. SRI R. VENKATARAMAN: The Government of India have prepared a list of 26 employments to be considered for addition to the Schedule to the Minimum Wages Act. Cotton ginning and hosiery are in the list. It is not possible to say whether and if so when the schedule will be expanded.

SRI V. K. KOTHANDARAMAN: இதில் பீடித்தொழிற்சாலையில் வேலை செய்கிறவர்களும் சேர்க்கப்பட்டிருக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: சேர்க்கப்பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI: ஜின்னிங் பாக்டரியில் பத்தாயிரம் பேர்கள் வேலை செய்வது போலவே பனியன் பாக்டரியில் நாலாயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் வேலை செய்வதால் குறைந்தபட்ச ஊதியத்தை ஏன் அவர்களுக்கு நிர்ணயம் செய்யக்கூடாது?

THE HON. SRI R. VENKATARAMAN: அவர்கள் அதிகமான பேர்கள் வேலை செய்கிறார்கள் என்ற காரணத்தால் அவர்களையும் சேர்க்கவேண்டுமென்ற அபிப்பிராயம் தான் இருக்கிறது. அதற்காகவும் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஷெட்யூல் திருத்தப்படாத வரையில் அவர்களுக்குக் குறைந்த பட்சக் கூலி நிர்ணயம் செய்வது முடியாது.

*House-sites for Harijans*

*208 Q.—SRI M. JAGANNATHAN: Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) the number of draft notification and draft declaration cases relating to the acquisition of house-sites for Harijans pending with the District Welfare Officer, South Arcot, now;